வெளியீட்டெண். 180.

# திருப்பரங்குன்றத் திருப்பதிகங்கள்.


சம்பந்தர்


சுந்தரர்



தருமபுர ஆதீனம்.



"திருப்பரங்குன்றமர் சேயைப் போற்றுவாம்"

— கந்தபுராணம்.



தருமபுர ஆதீன மடாலயத் தோற்றம்

வெளியீடு எண். 180. 632

உ

குருபாதம்

திருச்சிற்றம்பலம்

# திருப்பரங்குன்றத் திருப்பதிகங்கள்

இது

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

உரு-வது மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுள்ளத்தின்படி

வெளியிடப் பெற்றது.

**தருமபுர ஆதீனம்**

**1948.**

# முன்னுரை.

திருப்பரங்குன்றத் திருப்பதிகங்கள் என்னும் இச்சிறு வெளியீடு, திருக் கயிலாயபரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் 13—12—48 சோமவாரத் தன்று வழி பாட்டிற்காக எழுந்தருளிய காலத்துத் தமிழறியும் பெருமாள் தாளிணைக்குச் சாத்திய அறிவுமலராகும்.

இம்மலரின் மணத்தை அன்பர்கள் நுகர்ந்து உய்வார்களாக.



குருபாதம்

## திருப்பரங்குன்றம்

ஞாலம் போற்ற யான் விரும்பி
நாடும்பொருளை யளித்தருள்வான்
மாலையெனவே கடம்பணிந்த
மார்பன் வரிவண்டிசைபாடும்
சோலை யுடுத்த பழனிமலைத்
தூயன் மகரஞ் சுலவியிடும்
வேலைதனிலே வேலையிட
வேலைபுரிந்தான் பதம்பணிவாம்.

திருப்பரங் குன்றம் பாண்டி நாட்டிலே மதுரைக்குத் தென் மேற்கு மூலையில் அமைந்துள்ள தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாலும், சுந்தர மூர்த்தி சுவாமிகளாலும் பாடப்பெற்றது. அருணகிரிநாதர் திருப்புகழுமுண்டு. சுவாமி பெயர் பரங்குன்றீசர்.

அம்பாள் பெயர் ஆவுடை நாயகி. தல விநாயகர் கற்பகவிநாயகர். திருமாலின் திருநாமம் பவளக்கனிவாய்ப் பெருமாள். பரங்குன்றீசருக்கு மேற்கே முத்தீசரும் ஆதி புவனேசுவரி அம்மையாரும் எழுந்தருளியிருக்கின்றார்கள். முருகன் படை வீடுகளுள் முதலாவதாக அமைந்தது இது. சரவணப் பொய்கையிலிருந்து சிவ பூசைசெய்து சிறைப்பட்ட நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிச் சிறை வீடு பெற்ற தலம். முருகனுடைய திருவுருவம்மலையிலேயே அமையப்பெற்றுள்ளது. வள்ளி தெய்வயானையாரது திருவுருவங்களும் நவவீரரின் திருவுருவங்களும், முருகனுக்குப் பிழைசெய்வாரை வெட்டியெறியும் உக்கிரன் என்னும் பூத வீரனுடைய திருவுருவமும் இருக்கின்றன.

இப்பரங்குன்றின் பெருமை, அமைப்பு முதலியன "சூர் மருங்கறுத்த சுடரிலை நெடுவேல் சினமிகு முருகன்தண் பரங்குன்று"

(அகநானூறு 59) "கொடிநுடங்கு மருங்கிற் கூடல் குடா அது, பல் பொறி மஞ்ஞை வெல் கொடி உயரிய, ஓடியாவிழவின் நெடியோன் குன்றம்" (அகம் 152) "ஒன்னுதார் கடந் தடூஉம உரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்று," (பாலைக்கலி 26) என்ற சங்கச் செய்யுட்களாலும், திருப்பரங்கிரிப்புராணத் தாலும் நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

திருப்பரங் குன்றிலுள்ள சுனை மிக மிகப் பாராட்டப் பெற்றுள்ளது. சிபி வேந்தன் பூதானம் செய்த போது, அந்தணர் களில் ஒருவர் குறையக் கண்டு வருந்திஞன். சிவபெருமானே அந்தணஞக வந்து தான மேற்ருர். பிரமன் கலைமகளை மணந்து பிரம கூவம என்னும் தீர்த்தத்தை உண்டாக்கி வழிபட்டான். அகத்திய முனிவர் மாணுக்க ராகிய பிரமிட்ட முனிவரால் உண்டான குட்டநோயை கோவிதாரத்துவசன் என்னும் அரசன் போக்கிக் கொண்டான். இத்தலத்

தில்தான் முருகன் தெய்வயானையம்மையாரை வெற்றிப் பரிசாக மணந்துகொண்டார்.

(இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் இரண்டு உண்டு. இங்குள்ள சித்திர மண்டபத்தில் அகலிகை சாபம் பெற்ற வரலாறும் எழுதப்பட்டிருந்தனவென்று பரிபாடல் தெரிவிக்கிறது. முருகனுடைய ஒன்றாய் வேறாய் உடனாயிருக்குந் தன்மையும், எல்லாமாயல்லதுமாயிருக்குந் தன்மையும், வேண்டுதல் வேண்டாமை இலானாகஇருக்குந்தன்மையும் பரிபாடலால் நன்கு அறிவிக்கப்படுகின்றது. அதில் செவ்வேளுக்கென்று 8-பாடல்கள் உள்ளன.)

கிரி மேற் பக்கத்தில் அமைந்திருக்கும் குகைக்கோயிலில் நடராசர் முதலிய தெய்வச் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் உள்ளன.

இந்தத் தலத்தின் புராணத்தை இயற்றியவர் நிரம்ப அழகிய தேசிகர் என்பவர்.

வேதாரண்யத்திற் பிறந்தவர். சிவஞான சித்தியார், திருவருட்பயன் என்ற நூல்கட்கு உரை வகுத்தவர், இவராற் பாடப்பட்ட ஏனைய புராணங்கள் சேது புராணமும், திருவையாற்றுப் புராணமும் ஆம். இவருக்குச் சேது மன்னரால் துளாவூர் முதலிய இராமங்களும், திருப்பரங்கிரி மடமும் தானமாகக் கொடுக்கப்பட்டன வென்று தெரிகிறது.



சிவமயம்



# திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகம்

**பண் – குறிஞ்சி.**

இராகம்-**யதுகுலகாம்போதி.** தாளம்-**திருபுடை.**

திருச்சிற்றம்பலம்

நீடலர்சோதி வெண்பிறையோடு நிரைகொன்றை ௭
சூடலன் அந்திச் சுடரெரியேந்திச் சுடுகானில்
ஆடலன் அஞ்சொ லணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 1

அங்கமொராறும் அருமறைநான்கும் அருள்செய்து
பொங்குவெண்ணூலும் பொடியணிமார்பிற் பொலிவித்துத்
திங்களும்பாம்புந் திகழ்சடைவைத்தோர் தேன்மொழி
பங்கினன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 2

நீரிடங்கொண்ட நிமிர்சடைதன்மேல் நிரைகொன்றை
சீரிடங்கொண்ட எம்மிறைபோலுஞ் சேய்தாய
ஓருடம்புள்ளே யுமையொருபாக முடனாகிப்
பாரிடம்பாட இனிதுறைகோயில் பரங்குன்றே 3

வளர்பூங்கோங்க மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ்சாரல் வண்டறைசோலைப் பரங்குன்றம்
தளிர்போன்மேனித் தையல்நல்லாளோ டொருபாகம்
நளிர்பூங்கொன்றை சூடினன்மேய நகர்தானே. 4

பொன்னியல்கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்
துன்னியசோதி யாகியஈசன் சொன்மறை
பன்னியபாட லாடலன்மேய பரங்குன்றை
உன்னியசிந்தை யுடையவர்க்கில்லை உறுநோயே. 5

கடைநெடுமாடக் கடியரண்மூன்றுங் கனல்மூழ்கத்
தொடைநவில்கின்ற வில்லினன் அந்திச் சுடுகானில்
புடைநவில்பூதம் பாடநின்றாடும் பொருசூலப்
படைநவில்வான்தன் நன்னகர்போலும் பரங்குன்றே. 6

அயிலுடைவேலோ ரனல்புல்குகையின் அம்பொன்றால்
எயில்படவெய்த எம்மிறைமேய இடம்போலும்
மயில்பெடைபுல்கி மாநடமாடும் வளர்சோலைப்
பயில்பெடைவண்டு பாடலறாத பரங்குன்றே. 7

மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள்
பத்தினதிண்டோ ளிருபதுஞ்செற்றான் பரங்குன்றைச்
சித்தமதொன்றிச் செய்கழலுன்னிச் சிவனென்று
நித்தலுமேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே. 8

முந்தியிவ்வையந் தாவியமாலும் மொய்யொளி
உந்தியில்வந்திங் கருமறையீந்த வுரவோனும்
சிந்தையினாலுந் தெரிவரிதாகித் திகழ்சோதி
பந்தியலங்கை மங்கையொர்பங்கன் பரங்குன்றே. 9

குண்டாய்முற்றுந் திரிவார்கூறை மெய்போர்த்து
மிண்டாய்மிண்டர் பேசியபேச்சு மெய்யல்ல
பண்டால்நீழன் மேவியஈசன் பரங்குன்றைத்
தொண்டாலேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே. 10

தடமலிபொய்கைச் சண்பைமன்ஞான சம்பந்தன்
படமலிநாக மரைக்கசைத்தான்றன் பரங்குன்றைத்
தொடைமலிபாடல் பத்தும்வல்லார்தம் துயர்போகி
விடமலிகண்ட னருள்பெருந்தன்மை மிக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்



# சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம்

## பண் — இந்தளம்

இராகம்-நாதநாமக்கிரியை.] [தாளம்-ஆதி

திருச்சிற்றம்பலம்

கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டீருமைக்
கொண்டுழல்கின்றதோர்கொல்லைச்சில்லைச்
சேத்திட்டுக்குத்தித்தெருவேதிரியுஞ்
சில்பூதமுநீருந்திசைதிசையன
சோத்திட்டுவிண்ணோர்பலருந்தொழநும்
அரைக்கோவணத்தோடொருதோல்புடைசூழ்ந்
தார்த்திட்டதும்பாம்புகைக்கொண்டதும்பாம்
படிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 1

முண்டந்தரித்தீர்முதுகாடுறைவீர்
முழுநீறுமெய்பூசுதிர்மூக்கப்பாம்பைக்
கண்டத்திலுந்தோளிலுங்கட்டிவைத்தீர்
கடலைக்கடைந்திட்டதோர்நஞ்சையுண்டீர்
பிண்டஞ்சுமந்தும்மொடுங்கூடமாட்டோம்
பெரியாரொடுநட்பினிதென்றிருந்தும்
அண்டங்கடந்தப்புறத்தும்இருந்தீர்
அடிகேளுமக்காட்செய அஞ்சுதுமே. 2

மூடாயமுயலகன்மூக்கப்பாம்பு
முடைநாறியவெண்டலைமொய்த்தபல்பேய்
பாடாவருபூதங்கள்பாய்புலித்தோல்
பரிசொன்றறியாதனபாரிடங்கள்
தோடார்மலர்க்கொன்றையுந்துன்னெருக்குந்
துணைமாமணிநாகமரைக்கசைத்தொன்
றோடாதனவேசெய்தீரெம்பெருமான்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 3

மஞ்சுண்டமாலைமதிசூடுசென்னி
மலையான்மடந்தைமணவாளநம்பி
பஞ்சுண்டவல்குற்பணைமென்முலையா
ளொடுநீருமொன்றாயிருத்தலொழியீர்
நஞ்சுண்டுதேவர்க்கமுதங்கொடுத்த
நலமொன்றறியோம்உங்கைநாகமதற்
அஞ்சுண்டுபடம்அதுபோகவிடீர்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 4

பொல்லாப்புறங்காட்டகத்தாட்டொழியீர்
புலால்வாயனபேயொடுபூச்சொழியீர்
எல்லாமறிவீரிதுவேயறியீர்
என்றிரங்குவேனெல்லியுநண்பகலும்
கல்லாணிழற்கீழொருநாட்கண்டதுங்
கடம்பூர்க்கரக்கோயிலின்முன்கண்டதும்
அல்லால்விரகொன்றிலமெம்பெருமான்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 5

தென்னாத்தெனாத்தெத்தெனாவென்றுபாடிச்
சில்பூதமுநீருந்திசைதிசையன
பன்னான்மறைபாடுதிர்பாசூருளீர்
படம்பக்கங்கொட்டுந்திருவொற்றியூரீர்
பண்ணார்மொழியாளையோர்பங்குடையீர்
படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியீர்
அண்ணாமலையேனென்றீர்ஆரூருளீர்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 6

சிங்கத்துரிமூடுதிர்தேவர்கணந்
தொழநிற்றீர்பெற்றமுகந்தேறிடுதிர்
பங்கம்பலபேசிடப்பாடுந்தொண்டர்
தமைப்பற்றிக்கொண்டாண்டுவிடவுங்கில்லீர்
கங்கைச்சடையீர்உம்கருத்தறியோம்
கண்ணுமூன்றுடையீர்கண்ணேயாயிருந்தால்
அங்கத்துறுநோய்களைந்தாளகில்லீர்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 7

பிணிவண்ணத்தவல்வினைதீர்த்தருளீர்
பெருங்காட்டகத்தீர்பெரும்பேயுநீருந்
துணிவண்ணத்தின்மேலுமொர்தோலுடுத்துச்
சுற்றுநாகத்தராய்ச்சுண்ணநீறுபூசி
மணிவண்ணத்தின்மேலுமொர்வண்ணத்தராய்
மற்றுமற்றும்பல்பலவண்ணத்தராய்
அணிவண்ணத்தராய்நிற்றீரெம்பெருமான்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 8



கோளாளியகுஞ்சரங்கோளிழைத்தீர்
மலையின்றலையல்லதுகோயில்கொள்ளீர்
வேளாளியகாமனைவெந்தழிய
விழித்தீர்அதுவன்றியும்வேய்புரையுந்
தோளாளுமைநங்கையொர்பங்குடையீர்
உடுகூறையுஞ்சோறுந்தந்தாளகில்லீர்
ஆளாளியவேகிற்றீரெம்பெருமான்
அடிகேளுமக்காட்செயஅஞ்சுதுமே. 9

பாரோடுவிண்ணும்பகலுமாகிப்
பனிமால்வரையாகிப்பரவையாகி
நீரோடுதீயுநெடுங்காற்றுமாகி
நெடுவெள்ளிடையாகிநிலனுமாகித்
தேரோடவரையெடுத்தஅரக்கன்
சிரம்பத்திறுத்தீருமசெய்கையெல்லாம்
ஆரோடுங்கூடா அடிகேளிதுவென்
அடியேமுமக்காட்செய அஞ்சுதுமே. 10
அடிகேளுமக்காட்செய அஞ்சுதுமென்
றமரர்பெருமானையாரூரனஞ்சி
முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னே
மொழிந்தாறுமோர்நான்குமோரொன்றினையும்
படியாயிவைகற்றுவல்ல அடியார்
பரங்குன்றமேயபரமன்னடிக்கே
குடியாகிவானோர்க்குமோர்கோவுமாகிக்
குலவேந்தராய்விண்முழுதாள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

# திருமுருகாற்றுப்படை

திருச்சிற்றம்பலம்



உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்
கார்கோள் முகந்த கமம்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து

இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்
மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செம் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்
கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிறைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந்து இயற்றாக் கவின் பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர்இழைச்
சேண்இகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணைஈர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடைஇடுபு
பைந்தாள் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின் வைத்துத்
திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகள்அறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு

உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்
நறும்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேம்கமழ் மருது இணர்கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெரியாக்
கோழி ஓங்கிய வென்றுஅடு விறற்கொடி
வாழிய பெரிது என்று ஏத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர்அர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்

சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்
உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதின் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி ஆடிய கூர்உகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றுஅடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க
இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்புரிந்து உறையும்

செலவுநீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே;
செருப்புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடம்மலி மறுகில் கூடற் குடவயின்
'இரும்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எல்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று' அமர்ந்து உறைதலும் உரியன்;
பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே! அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

# திருத்தொண்டர் புராணம்

திருச்சிற்றம்பலம்

பரமர்திருப் பரங்குன்றில் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீழ் ஆட்செய்யும்
அருமைநினைந் "தஞ்சுதும்"என் றாரூரர் பாடுவார்.

"கோத்திட்டை" என்றெடுத்துக் கோதில்திருப் பதிகஇசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க ளுடன்முன்பே
ஏத்தியவண் தமிழ்மாலை இன்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில்.

இறைவர்திருத் தொண்டுபுரி அருமையினை இருநிலத்து
முறைபுரியும் முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்தொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோர் அப்பாலும் நிருத்தர்பதி தொழநினைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புகழ்

திருச்சிற்றம்பலம்

உனைத்தினந்தொழு திலனுன தியல்பினை
உரைத்திலன்பல மலர்கொடுனடியிணை
உறப்பணிந்தில னொருதவமிலனுன தருள்மாறா

உளத்துளன்பின ருறைவிடமறிகிலன்
விருப்பொடுன்சிக ரமும்வலம்வருகிலன்
உவப்பொடுன்புகழ் துதிசெயவிழைகிலன் மலைபோலே

கனைத்தெழும்பக டதுபிடர்மிசைவரு
கறுத்தவெஞ்சின மறலிதனுழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடுகதைகொடு பொருபோதே

கலக்குறுஞ்செய லொழிவறஅழிவுற
கருத்தழிந்தல முறுபொழுதளவைகொள்
கணத்திலென்பய மறமயில்முதுகினில் வருவாயே

வினைத்தலந்தனி லலகைகள்குதிகொள
விழுக்குடைந்துமெ யுகுதசைகழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவுணரையமர் புரிவேலா

மிகுத்தபண்பயில் குயில்மொழியழகிய
கொடிச்சிகுங்கும முலைமுகடுழுநறை
விரைத்தசந்தன ம்ருகமதபுயவரை யுடையோனே

தினத்தினஞ்சதுர் மறைமுனிமுறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவிணவரொடு
சினத்தைநிந்தனை செயுமுனிவார்தொழ மகிழ்வோனே

தெனத்தெனந்தென எனவரியளிநறை
தெவிட்டஅன்பொடு பருகுயர்பொழில்திகழ்
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே.

மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந்தொண்டையமு துண்டுகொண்டன்பின்மிக
வம்பிடுங்கும்பகன தனமார்பில்

ஒன்றஅம்பொன்றுவிழி கன்றஅங்கங்குழைய
உந்தியென்கின்றமடு விழுவேனை

உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்

பன்றியங்கொம்புகம டம்புயங்கஞ்சுரர்கள்
பண்டையென்பங்கமணி பவர்சேயே

பஞ்சரங்கொஞ்சுகிளி வந்துவந்தைந்துகர
பண்டிதன்தம்பியெனும் வயலூரா

சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகம்பைம்பொன்மலர் செறிசோலை

திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே.





ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம். C. 500. 10—12—48.

## சம்பந்தர் துதி.

மறுவில்சீர்க் காழி வேந்தை
மலைமகள் பாலுண்டோனைப்
பெறுகரித் தோலைப் போர்த்த
பிஞ்ஞகன் பழைய சோமன்
குறைபெறு துண்டம் வேணி
தரித்தவன் கொடுக்க நாலோ(டு)
அறுபது கலையை வாங்கும்
ஐயனைப் போற்றி செய்வாம்.

## சுந்தரர் துதி.

பரவை தனக்குத் தூதுரையாய்
பரமா! எனஓர் வேதியனாய்
அரியும் அயனும் அறியாத
அடியு முடியும் பரவைமனை
மருவும் வாயிற் படிகாண
வந்து திரும்பும் வல்க்கையிற்
பரசு தரனை யெடுத்தமிழ்
பகர்சுந் தரனைப் பணிவாமே.

திருச்சிற்றம்பலம்.